உ
திருச்சிற்றம்பலம்

# எது சந்நியாசம்?

இந்தக் காலத்திலே சந்நியாச ஆச்சிரமத்தை அனேகர் சரியாக விளங்கிக் கொள்வதில்லை. தன் மனத்தையும் வாழ்வையும் மேலானவையாக மாற்றி அமைத்துக் கொள்பவனே சந்நியாசி. காவியுடுத்தவர்கள் எல்லாரும் சந்நியாசிகளாகி விடல் முடியாது. சமுதாயத்தின் தரத்துக்கு அளவுகோலாக இருப்பது சந்நியாச ஆச்சிரமம்.

சந்நியாசம் என்றால் முற்றத் துறத்தல் ஆகும். எதைத் துறக்க வேண்டும், ஏன் துறக்க வேண்டும் என்பன இங்கே எழுகின்ற வினாக்கள். ஒரு நிலையைத் துறந்து மற்றொரு நிலையை எய்த வேண்டும். துறத்தல் மூலமாகவே உயிர்கள் அனைத்துக்கும் மேலாம் நிலைகள் வந்து வாய்க்கின்றன.

நாவால் அறுசுவைகளையும் சுவைத்து உண்பதற்கு உயிர்கள் பேரவக் கொள்கின்றன. ஆனால் ஊணை வெறுத்துவிட வேண்டும் என்று சொல்கின்றார்களே! நாவை வெந்து போனதற்கு நிகராக்கும்படி நூல்கள் பேசுகின்றன. இதன் பொருளை நாம் சிந்திக்கு வேண்டும். ஊணை வெறுத்தல் உயிரை வெறுப்பதற்குச் சமமாகின்றது.

ஆண் பெண் பால் வேற்றுமையில் வளர்ந்து வருகின்ற காமத்தை நிறைவேற்றிக் கொள்வது இயற்கைக்கு மாறானது என்று சிந்திக்க முடியாது. அதற்காக உயிர்கள் எவ்வளவு சிரமப்படுகின்றன என்பதை நாம் நேரிலே பார்க்கின்றோம். காமத்தை விட்டுவிட வேண்டும் என்று சொன்னால், செத்துப்போ என்று சொல்வதற்கு அது ஒப்பாகின்றது.

எத்தனையோ பிறவிகளிலே செய்துகொண்ட நற்றவத்தின் பயனாக நமக்கு வாய்த்துள்ள ஐம்புலன்களையும் அறவே அடக்கி விடவேண்டும் என்றால் அதைத் தற்கொலை என்று சொல்வதை விட வேறு என்ன என்றுதான் சொல்ல முடியும்? இந்த உண்மையை விளங்காமல் பேசுகின்றவர்களைப் பார்த்துப் பாடுகின்றார் திருமூலர்:

**“அஞ்சும் அடக்கடக் கென்பர் அறிவிலார்**
**அஞ்சும் அடக்கும் அமரரும் அங்கிலை**
**அஞ்சும் அடக்கில் அசேதன மாமென்றிட்டு**
**அஞ்சும் அடக்கா அறிவு அறிந் தேனே.”**

ஆகவே, புலனடக்கம் என்பது புலன்களைத் தீயவழியில் செலுத்தாது தூயவழியில் செலுத்துவதேயாம். பொறி புலன்களைச் செயல்அறச் செய்தல் அடக்குதல் ஆகாது. அடக்குதல் என்றால் இறைவன் பால் அவற்றைச் செலுத்தி உயரும் நன்னெறிக் கண் ஒழுகுதல் ஆகும். திருமூலரின் இன்னொரு பாடலும் இங்கே நினைவுக்கு வருகின்றது:

**"ஆக மதத்தன ஐந்து களிறுள**
**ஆக மதத்தறி யோடணை கின்றில்**
**பாசனு மெய்த்தவை தாமும் இளைத்தபின்**
**யோகு திருந்துதல் ஒன்றறி யோமே".**

செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு ஆகிய மிக்க மதத்தையுடைய ஐந்து யானைகள் உடம்பகத்தே இருக்கின்றன. அவை அடங்கா மதங்கொண்டிருப்பதால் கந்தாகிய கட்டுத் தறியிலே அணையாது இருக்கின்றன. இறைவனே அந்தக் கட்டுத்தறி! ஐம்புலன்களின் வழியே சென்று பாகர்களாகிய உயிர்களும் இளைத்து இருக்கின்றன. அந்த யானைகளும் அலைந்து அலைந்து திகைக்கின்றன. ஆகவே செய்ய வேண்டியது ஒன்றுண்டு. புலன்களாகிய யானைகளைக் கட்டுத்தறியாகிய இறைவன்பால் அணைத்துவிட வேண்டும்.

இதனை இன்னும் விளக்கமாகச் சொன்னால், ஐம்பொறிகளை ஈச்வர ஆராதனைக்கென்றே ஒப்படைத்துவிட வேண்டும். அதுவே சந்நியாசம்.

சந்நியாசம் என்னும் சொல்லின் கருத்தை நாம் அறிய வேண்டும். கரத்தைக் கடவுள் வழிபாட்டுக்கென்றே ஒப்படைத்து விடுதல் கரநியாசம். அங்கங்களை ஈசுவர வழிபாட்டுக்கென்றே ஒப்படைத்து விடுதல் அங்க நியாசம். ஒருவன் தன் வாழ்வு முழுவதையும் இறை வழிபாட்டுக்கென்றே ஒப்படைத்து விடுதல் சந்நியாசம். சம் என்றால் முற்றிலும் என்பது பொருள். ஆகவே சந்நியாசம் என்றால் முற்றிலும் தன்னைப் பரம்பொருளிடத்தே ஒப்படைத்தலாகும். ஐம்பொறிகளைப் பாழ்படுத்துவது சந்நியாசம் அன்று.

## 2. சந்நியாசம், தியாகம்:

பகவானைக் கேட்கின்றான் பார்த்தன்:

"இந்திரியங்களுக்கு இறைவா, சந்நியாசத்தினுடைய மெய்ப்பொருளையும் தியாகத்தினுடைய மெய்ப்பொருளையும் அறிந்து கொள்ள விரும்புகின்றேன்."

பகவான் விளக்கத் தொடங்குகின்றான்:

**"காம்யானாம் கர்மணாம் ந்யாசம் ஸந்யாஸம் கவயோ விது:**
**ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா:"**

## எது சந்நியாசம்

காமிய கர்மங்களைத் துறப்பதைச் சந்நியாசம் என ஞானிகள் கருதுகின்றார்கள். எல்லாக் கர்மங்களின் பயன்களை விடுவதைத் தியாகம் என்கின்றார்கள் தீர்க்கதரிசிகள்.

உடம்பின் வருத்ததுக்கு அஞ்சிக் கர்மத்தைத் துக்கமெனக்கருதி அதைத் துறப்பவன் ராஜஸ தியாகம் செய்கின்றான். அதனால் அவன் தியாக பலனை அடைவதேயில்லை. அர்ச்சுனா, பற்றையும் பயனையும் விட்டுச் செய்வதற்கு உரியதென்றே எந்த நித்தியகர்மம் செய்யப்படுகின்றதோ அந்தத் தியாகம் சாத்விகமான தென்று கருதப்படும். சத்வம் நிறைந்தவனும் பேறறிஞனும் ஐயத்தை அகற்றியவனும் ஆகிய தியாகி துன்பவினையை வெறுக்க மாட்டான்; இன்ப வினையை விரும்பவும் மாட்டான். உடல் எடுத்துள்ள சீவனால் கர்மங்களை முற்றிலும் விட்டுவிடமுடியாது. ஆயின் எவன் கர்மபலனை விட்டவனோ அவன் தியாகி என்று கூறப்படுகின்றான். கர்மபலனை விடாதவர்களுக்கு மரணத்தின் பின் துன்பமாயும் இன்பமாய்ம் இவை இரண்டின் கலப்பாயும் வருகின்ற மூவகையாக வினைப்பயன்கள் விளைகின்றன. கர்ம பலனை விட்ட தியாகிகளுக்கோ எனின், இங்ஙனம் வினைப்பயன் உண்டாவதில்லை.

## 3. செத்தாரைப் போலே திரி"

சரீரத்துடன் வாழ்ந்திருக்கும் போதே செத்தவன் போன்று வாழ்பவனே சந்நியாசி. தன் உடலைச் செத்துப் போனதாகக் கருதி அவன் அந்த உடலுக்கு ஆத்மபிண்டம் போடுவான். உணவை உண்பது உருசிக்காக அல்லது உடலைப் பாதுகாக்க வேண்டும் என்பதற்காக என்று அவன் எண்ணமாட்டான். அவன் உடலுக்குக் கொடுக்கின்ற உணவை உடலினுள் இருக்கும் சர்வேசுவரனுக்கு நைவேத்தியமாகக் கொடுப்பான். ஆண்டவனுடைய ஆணையினாலே கருவியாய் இருக்கும் காயத்துக்குப் போஷணை நிகழ்ந்து வருகின்றது என்னும் எண்ணத்திலே அவன் உறுதி பெற்றிருப்பான். உணவை உண்ணும்போது உடலைப் பிணமாகக் கருதுகின்றான் என்றால், சந்நியாசியின் செயல் செயற்கரியதுதானே!! இவ்வித வாழ்க்கையின் விளைவாகச் சந்நியாசி உடல் வாழ்வைக் கடந்து ஆதம் சொரூபமாக மாறி அமைகின்றான். நிழல் போன்று சரீரம் அவனைச் சார்ந்திருக்கின்றது. சித்தன் போக்கு சிவன் போக்கு என்றும் ஓடுகின்ற ஆற்று நீரும் உலாவுகின்ற யதியும் (சந்நியாசி) மாசுபடிவதில்லை என்றும் நாட்டிலே வழங்குகின்ற பழமொழிகளுக்கு நமக்கு இப்போது பொருளும் தெரிந்துவிடுகின்றது.

உலகத்தவர்களுடைய போக்கு பிரவிருத்து மார்க்கம். ஆனால் சந்நியாசியினுடைய மார்க்கமோ நிவிருத்தி. தான் தனது என்பனவற்றை எல்லாம் சந்நியாசி உலகுக்கு உரியனவாக்கி, தன்னைப் பரம்பொருளுக்கு உரியவனாக்கி விடுகின்றான். உலக ஆசைகளை முற்றாகத் துறந்தவன் சந்நியாசி. எக் கர்மமும்

சந்நியாசியைப் பந்தப்படுத்தமாட்டாது. வாழ்க்கைக்கு அவன் சாட்சியாக இருந்து வருகின்றான். பிராரப்த கர்மத்தின் வேகத்துக்கு இயைய ஆசையற்ற சந்நியாசியினால் இறைவன் திட்டம் உலகத்திலே நிகழ்கின்றது.

## 4. உள்ளத்துறவே சந்நியாசம்

**"காடே திரிந்தென்ன, காற்றே புசித்தென்ன, கந்தைசுற்றி**
**ஓடே எடுத்தென்ன உள்ளன்பில்லாதவர், ஓங்கிவிண்ணோர்**
**நாடே இடைமருதீசர்க்கு மெய்யன்பர் நாரியார்பால்**
**வீடே இருப்பினும் மெஞ்ஞான வீட்டின்பம் மேவுவரே".**

- பட்டினத்தார்

எண்ணரிய பிறவிகளில் மனது விரிவு அடைந்து வந்ததனாலேயே சிற்றுயிர் பேருயிராகப் பரிணமித்து இருக்கின்றது. மானுட நிலையில் நல்ல காமங்கள் ஏற்படுவதனால் மனிதன் தெய்விகமாகின்றான். காமங்களிலெல்லாம் பெரிய காமம் ஈசனைப் பற்றிய காமமாகும்.

**"எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உந்தன்னோடு**
**உற்றோமே ஆவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்**
**மற்றைநம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்".**

நாம் தேவரீருடைய உறவு உடையவர்களாகக் கடவோம். தேவரீருக்கே நாங்கள் அடிமை செய்யக் கடவோம். வேறு பொருள்களில் உண்டாகும் நம் காமங்களை மாற்றி அருள வேண்டும். என்று ஸ்ரீ ஆண்டாள் பாடுவது கோடானுகோடி விதத்தில் வடிவு எடுக்கும் காமங்கள் பண்பட்ட மனத்தில் தெய்விகக் காமமாக வடிவு எடுப்பதைச் சொல்லித் தருகின்றது.

**"உள்ளினும் சுட்டிடும் உணரும் கேள்வியில்**
**கொள்ளினும் சுட்டிடும் குறுகி மற்றதைத்**
**தள்ளினும் சுட்டிடும் தன்மை ஈதினால்**
**கள்ளினும் கொடியது காமத் தீயதே"**

**- கந்தபுராணம்**

காமத்தீ பொல்லாதது. ஆனால் அதைத் தெய்விகமாக மாற்றிவிட்டால், அது இனிக்கும். அதுவே வீடுபேறு, விடுதலை.

## 5. பூரண சந்நியாச விளக்கம்

**விட்டேன் உலகம், விரும்பேன் இருவினை வீணருடன்**
**கிட்டேன் அவருரை கேட்டுமிரேன், மெய்கெடாதநிலை**
**தொட்டேன் சுகதுக்கம் அற்றுவிட்டேன், தொல்லை நான்மறைக்கும்**
**எட்டேன் எனும்பரம் என்னிடத்தே வந்திங்கு எய்தியதே.**

**- பட்டினத்தார்**

**வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை**
**யாண்டும் அஃதொப்ப தில்.**

**- குறள்**

[Extract from the book “Finding Fulfilment” Published by London Meikandaar Aadheenam]